Reg. No. M. 2997. தனிப்பிரதி அணு 1

ஆசிரியர் :
யாழ்ப்பாணம்
தென்கோவை
ச. கந்தைய பிள்ளை
தமிழ்ப் பண்டிதர்,
சிலோன்.

REPUBLIQUE FRANÇAISE

Liberté - Egalité - Fraternité

# VITTAGAM

LE REDACTEUR
TENKOVAI
S. CANDIAH PILLAI
TAMIL PANDIT
JAFFNA
CEYLON.

JOURNAL HEBDOMADAIRE PARAISSANT LE JEUDI

# வித்தகம்

வியாழக்கிழமைதோறும் வெளிவருவது

Bureau de la Direction :—
RUE D'AMBALATADOUAYER
MADAM NO. 4, Pondichery.

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது. குறள்.

காரியாலயம்:—
அம்பலத்தாடு ஐயர் மடத்து
வீதி நே. 4, புதுவை.

VOL. I. { புதுவை, பவ-ஹு ஆனி-மீ கஉ (14—6—34) } No. 29.

## திருமந்திரம்

ஆணைய மாய்வருந் தாது ளிருந்தவர்
மாணைய மாய மனத்தை யொருக்கிப்பின்
பாணைய மாய பரத்தை யறிந்தபின்
றாணைய மாய தனுதனந் தானே.

மருவொத்த மங்கையுந் தானு முடனே
யுருவொத்து நின்றமை யொன்று முணராக்
கருவொத்து நின்று கலக்கின்ற போது
திருவொத்த சிந்தைவைத் தெந்தைநின் றானே.

அம்பன்ன கண்ணி யரிவை மனோன்மனி
கோம்பன்ன நுண்ணிடைக் கோதை குலாவிய
செம்பொன்செய் யாக்கை செறிகமழ் நாடோறு
நம்பனை நோக்கி நவலுகின் றாளே.

# பெண்பாற் புலவர்கள்

யாழ்ப்பாணம் வேலணையூர்,

## பண்டிதர் திரு கா. பொ. இரத்தினம்

அவர்கள் எழுதியது



( 28-ம் வாரத்தொடர்ச்சி )

### குறமகள் இளவெயினி

குறவர் தலைவனாகிய 'ஏறைக்கோனை' "எம்மோன்" என்று இவர் கூறியிருத்தலினால் இவர் குறக்குடியில் பிறந்தவர் என்பதும் இவர்க்கு இப்பெயர் சாதியால் வந்தது என்பதும் அறியக்கிடக்கிறது.

இவர் ஏறைக்கோனின் நற்குண நற்செய்கைகளைப் புகழ்ந்து

'தனக்குச் சிறந்தோர் தன்னைப் பிழைப்பின் தான் அதைப் பொறுத்தலும் பிறருடைய வறுமைக்குத் தான் நாணுதலும், படையிடத்து நல்ல வலியை உடையனாதலும், அரசனையுடைய சபையின்கண் மேலாக நடத்தலும் நும்மால் மதிக்கப்படுந் தலைவர்க்குத் தகுவனவல்ல. அகன்ற மார்பினையும் கொல்லும் வேலினையும் காந்தட்பூ மாலையையுமுடைய குறவர்க்குத் தலைவனும், ஆகாயத்திலியங்குகின்ற மேகத்தைத் தனது உயர்ந்த சிகரத்தால் தடுக்கின்ற மலையினது உச்சிக்கண் பொழுது படுகின்ற காலத்தில் இனத்தினின்றும் பிரிந்து தான் சேரும் இடத்தைக் காணுக காட்டிலுள்ள கலைமான் தன் இளம்பிணையைப் பயிரால் அழைப்பின் அவ்வோசையை குகையின்கட் கிடக்கின்ற பெரும்புலியேறு செவி கொடுத்துக் கேட்கும் பெரிய மலை நாடனும், எமது தலைவனுமாகிய ஏறைக்கோனுக்கே தகும். எனும் அருங் கருத்தமைந்த

"தமர்தன் தப்பின் அதுநோன் றல்லும்
பிறர்கை யறவுதான் நாணு தலும்
படைப்பழி தாரா மைந்தினன் ஆகலும்
வேந்துடை அவையத்து ஓங்குபு [நடத்தலும்
நும்மோர்க்குத் தகுவன அல்ல; எம்மோன்,
சிலைசெல மலர்ந்த மார்பில் கொலைவேல்
கோடற் கண்ணிக் குறவர் பெருமகன்
ஆடுமழை தவிர்க்கும் பயங்கெழு மீமிசை
எற்படு பொழுதின் இனந்தலை மயங்கி
கட்சி காணாகி கடமான் நல்லேறு
மடமா நாகுபிணை பயிரின் விடர்முழை
இரும்புலிப் புகர்ப்போத்து ஓர்க்கும்
பெருங்கல் நாடன்எம் ஏற்றைக்குத்
தகுமே."

எனுஞ் செய்யுளைப் பாடினர்.

இப்பாவால் ஏறைக்கோன் "குற்றம் பார்க்கில் சுற்றமில்லை" என்பதை நன்கறிந்தவன் என்பதும், ஈகைக்குணமும் வீரமும் பெருமிதமும் பொருந்தியவன் என்பதும், காந்தட்கண்ணியை உடையவன் என்பதும் பெறப்படுகிறது.

### மாற் பித்தியார்

இவர் எக்குலத்தினர் என்பதும் யாரைப் பாடினர் என்பதும் அறிய முடியாதிருக்கிறது. இவர் செய்தனவாக புறநானூற்றில் இரு செய்யுள்கள் காணப்படுகின்றன. அச் செய்யுள்களில் ஒன்று

"ஓவத்தன்ன இடனுடை வரைப்பில்
பாவையன்ன குறுந்தொடி மகளிர்
இழைநிலை நெகிழ்த்த மள்ளற் கண்டிகும்
கழைக்கண் நெடுவரை அருவி ஆடிக்
கான யானை தந்த விறகில்
கடுந்தெறற் செந்தீ வேட்டுப்
புறந்தாழ் புரிசடை புலர்த்துவோனே"

என்பது மற்றது. 'ஒலிக்கும் வெள்ளிய அருவிநீரை ஏற்றலால் நிறம்மாறி தில்லந்தளிர் போன்ற புற்கென்ற சடையோடு கூடி நின்று இப்பொழுது செறிந்த இலையையுடைய தாளியைப் பறிப்போன் முன்பு வீட்டின்கணியங்கும் மடப்பத்தையுடைய மயிலை அகப்படுத்திக் கொள்ளுஞ் சொல்லாகிய வலியையுடைய வேட்டுவனாயிருந்தவன் எனும் பொருள் அமைந்த

"கறங்கு வெள்ளருவி ஏற்றலின் நிறம் [பெயர்ந்து
தில்லை யன்ன புல்லென் சடையோடு
அள்ளிலைத் தாளி கொய்யு மோனே
இல்வழங்கு மடமயில் பிணிக்குஞ்
சொல்வலை வேட்டுவன் ஆயினன் [முன்னே"

என்பது.

'கானயானையும் ஏவல் செய்ததெ' ன்று அவனுடைய தவமிகுதியைக் கூறினர். "செந்தீப்பேணிய முனிவர் வெண்கோட்டுக், களிறு தருவிறகின வேட்கும்" என்னும் பெரும்பாணாற்றுப்படை யடிகளானும் தவஞ் செய்வோர்க்கு யானை விறகு கொடுக்குமென்பதை அறியலாம்.

இவராற் பாடப்பட்ட தலைவன் அளப்பருஞ் செல்வத்தை நுகர்ந்த ஒருவன் என்பதும், இல்லறத்தில் ஒழுகியவன் என்பதும். பின்னர் இவற்றையெல்லாந் துறந்து அருங்கானிற் சென்று பெருந்தவம் புரிந்தவன் என்பதும் இவர் அவனைச்சந்தித்த சமயத்தில் அவன் நீராடிவிட்டுப் புறந்தாழ் புரிசடை உணர்த்தினன் என்பதும் பின்னர் உணவிற்காகத் தாளி கொய்தான் என்பதும் பிறவும் இச்செய்யுள்களினின்று புலப்படுகிறது.

இன்னும் இவர்] காட்டிற்குச் சென்று அவனைப் புகழ்ந்து பாடியதால் நாட்டிலிருந்தகாலத்தில் அவன் இவரை ஆத

சித்து வந்தமையையும், அவன்மேல் இவர் கொண்ட உழுவலன்பின்றிறன் எத்தகைய தென்பதையும் அறிந்து கொள்ளலாம்.

### வெண்ணிக் குயத்தியார்

இவர் வெண்ணி என்னுமூரில் குயச் சாதியில் பிறந்தமையால் இப்பெயரைப் பெற்றார். இவர் பாடியதாகப் புறநானூற்றில்

"நளியிரு முந்நீர் நாவாயோட்டி
வளிதொழி லாண்ட உரவோன் மருக
களியியல் யானைக் கரிகால் வளவ!
சென்றமர்க் கடந்த நின் ஆற்றல் தோன்ற
வென்றோய் நின்னினு நல்லன் அன்றே
கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை
மிகப்புகழ் உலகம் எய்திப்
புறப்புண் நாணி வடக்கிருந் தோனே"

எனுஞ் செய்யுள் ஒன்று காணப்படுகிறது.

இதன் பொருள்: நீர்செறிந்த பெரிய கடலில் கப்பலை ஓட்டிப் போர் செய்தற்குக் காற்றின்றிக் கப்பல் ஓடாது நிற்க உடனே வாயுபகவானை அழைத்து ஏவல் கொண்ட வலியோன்மரபிலுள்ளவனே! மதயானையையுடைய கரிகாலனே! மேற் சென்று போரை எதிர் நின்று கொன்ற நினது வலிதோற்ற வென்றவனே! வெண்ணிப் பறந்தலையில் பெற்ற புண்ணிற்கு நாணி உலகத்துப் புகழை மிகப் பொருந்தி வடக்கிருந்தோன் நின்னினும் நல்லன் அன்றே" என்பது.

'கரிகால் வளவ' என மூன்றும் அடியில் வந்திருத்தலால் பாட்டுடைத் தலைவன் கரிகால்வளவனே யென்க. இப்புலவருடைய ஊர் புறத்திலுள்ள போர்க்களத்தில் கரிகாலன் சேரபாண்டியர்களோடு பொருது அவர்களை வென்றான் என்பதை

"காய்சின மொய்ம்பிற் பெரும்பெயர்க் [கரிகால்
ஆர்கலி நறவின் வெண்ணி வாயிற்
சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின்
வேந்தர்சாய மொய்வலி அறுத்த ஞான்றை

எனும் அகநானூற்றுச் செய்யுளாலும்

"இரும்பனம் போந்தைத் தோடும் [கருஞ்சினை
அரவாய் வேம்பின் அங்குழைத் தெரியலும்
ஓங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த
இருபெரு வேந்தரு மொருகளத் தவிய
வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்றாட்
கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்"

எனும் பொருநராற்றுப்படை அடிகளாலும் அறியலாம். அவ்விருவரில் சேரன் புறப்புண்ணாணி வடக்கிருந்ததை இச் செய்யுளாலன்றி

"கரிகால் வளவனொடு வெண்ணிப் [பறந்தலைப்
பொருது புண்ணாணிய சேரலாதன்
அழிகள மருங்கின் வாள்வடக் கிருந்தென"

எனும் அக நானூற்றுச் செய்யுளாலும் தெளிக. அச்சேரவரசன் 'சேரமான் பெருஞ்சேரலாதன்' என்பது அவனைப் பாடிய புலவர் திலகராகிய கழாத்தலையார்

"தன்போல் வேந்தன் முன்புகுறித் [தெறிந்த
புறப்புண் ணாணி மறத்தகை மன்னன
வாள்வடக் கிருந்தனன்" எனக்கூறினமையால் பெறப்படுகிறது.

"நளியிரு முந்நீர் நாவா யோட்டி
வளிதொழி லாண்ட உரவோன்"

என சோழர்குல முன்னோனொருவனுடைய வீரச் செயலைக் கூறியிருக்கிறார். இஃது சங்க நூல்களில் வேறெவ்விடத்துங் காணப்பட்டிலது. "வாதராசனை வலிந்து பலி கொண்டவனும்" எனக் கலிங்கத்துப் பரணி கூறுகிறது.

இவ்வடிகளுக்கு 'நீர் செறிந்த பெரிய கடலின் கண்ணே மரக்கலத்தை ஓட்டிப் போர் செய்தற்குக் காற்றின்றி நாவாய் ஓடாதாக வளிச் செல்வனை அழைத்து ஏவல் கொண்ட வலியோன்' என்று புறநானூற்றுரையாசிரியர் பொருள் கூறுதலினாலும், சிலப்பதிகாரத்தில் 'கடற் கடம் பெறிந்த காவலனாயினும்' எனவும் அகநானூற்றில் "சேரல தன் முந்நீரோட்டிக் கடம்பறுத்து" எனவும் "சேரலாதன மால் கடலோட்டிக் கடம்பறுத்து" எனவும் பதிற்றுப்பத்தில் "இருமுந்நீர்த்துருத்தியுண் முரணியோர்த்தலைச் சென்று கடம்பு முதற் றடிந்த கடுஞ்சின முன்பின் நெடுஞ் சேரலாதன்" எனவும் "மாக்கடனிக்கிக் கடம்பறுத்தியற்றிய" எனவும் கூறப் பட்டிருத்தலால் இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் தமிழகத்திற் கப்பாலுள்ள தீவொன்றில் வசித்த பகைவரைக் கப்பற் படையுடன் சென்று பொருது வென்றான் என்பது பெறப்படுதலினாலும் பழந் தமிழ்க் காவலர்களிடம் நிலப்படையே யன்றிக் கப்பற்படையும் இருந்த தென்பதும் அவர்கள் நிலப்போரிலன்றி நீர்ப் போரிலும் வல்லுநரென்பதும் பெறப்படுகிறது.

தொடரும்.

---



---

## அறிவிப்பு

கடிதர்களின் அபிப்பிராயங்களுக்கு அவர்களே பொறுப்பாளிகள்.

உ

திருவருள் துணை




காலமுண் டாகவே காதல்செய்
துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன்
வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப்
பிரான்றன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின்
றான்வந்து முந்துமினே.
(திருவாசகம்)

# வித்தகம்

புதுவை,
பவ-௵ ஆனி-௴ 1 உ

## நிறை

நிறை என்பது என்னை ? மிகுதலும் குறைதலும் அற்ற நிலையே — அசைவற்ற நிலையே — அசையாமல் அசைவதுவே—கௌண அசைவே நிறை என்று கூறப்படும். நிறையே சிவம்—அமல ஐகாரம்—வாய்மையான சத்துவம். வியாப்பியத்தின் அந்தமும் வியாபகத்தின் ஆதியும் சேர்ந்த இடம்—காணப்பட்ட இடம் இதுவே. இருவினை எனும் உடல் உயிர் அற்று அஃதாவது சமம் பெற்று—நிறை பெற்று நின்ற இடம் இதுவே. நிறை கோலாகிய மைய முள் எப்பக்கமும் சாயாது புற இயக்கம் எனும் வெளிப்படையான இயக்கமின்றி அசையாமல் அசைந்து நிற்கும் இடம் இதுவே. அம் மையமுள் நிறை காட்டும். நிறையைக் காட்டுவதும் நிறையும் இதுவே. அமல ஐகாரமெனும் இதினின்றும் நிறை பிரிந்து பஞ்சீகரணித்து வியாபகம் பெற்றதே அகிலம்—பிரபஞ்சம். (பிர = உபசர்க்கம்; பஞ்சம்—விரிவு). நிறையை அறிவது மிக அரிது. நிறையை அறிந்தவரே—கண்டவரே சைவத்தின் அடியைக் கண்டவர்—சமாதி பெற்றவர் பூரணமான சாந்திபெற்றவர்.

“.................................
ஆரியகாரணமாயத்தவத்திடைத்
தாரியல் தற்பாஞ்சேர்தல் சமாதியே.”

(திருமந்திரம்—9ம் தந். அட்டாங்க
யோகப்பேறு. 8.)

எனத் திருமூலர் கூறியதும் அறிக.

ஆரியம் காரணம் வியாப்பியம் என்பன ஒன்றே. தமிழ் காரியம் வியாபகம் என்பன ஒன்றே. விரிப்பிற் பெருகும். அமயம் நேர்ந்துழி விரித்து விளக்கப்படும்.

லௌகிகம் வேறு பாரமார்த்திகம் வேறன்று. ஆதலால் காரணமாகிய நிறையை அடைவதற்கு சாரியமாகிய லௌகிகத்திலும் நிறையோடு ஒழுகுதல் இன்றியமையாதது. தடாகத்துத் தண்ணீர் போல, வினைவயத்தால் ஓவாது அசைந்து நிற்கும் அஃதாவது ஊசலாடும் மனமானது அவ் ஊசலாட்டமாகிய அவச்சலனம் நீங்கிப் பணிசெய்து கிடத்தலே நிறையோடு ஒழுகுதலாகும். ஆகார பீஜ யோனி எனப்படும் முன்னிலை விவகாரங்களில் அஃதாவது அருந்தல் பொருந்தல்களில் நிறை தவறாது ஒழுகுதல் வேண்டும். மனைவி மக்கள் சுற்றம் நண்பர் பகைவர் கொதுமலர் என்னும் யார் மாட்டும் நிறை தவறாது ஒழுகுதல் வேண்டும். நிறை தவறினாலோ உளவாகும் ஏதப்பாடுகள் அளப்பில வாம். முன்னிலை விவகாரங்களில் நிறையோடு ஒழுகினால் அவச்சலனம் அகலும். சரீரத்தில் சுத்த அக்கினி ஆக்கமுறும். பேரின்ப முளை அங்குரம் பெறும். இவற்றால் உடல் உயிராகிய இருவினை சமம் பெறும். அறம் பொருள் இன்பம் வீடு எளிதாம். நிறை தவறுதலால் அசுத்த அக்கினி ஆக்கமுறும். காமம், கோபம் முதலிய பகைகள் அதிகரிக்கும். இவற்றால் உடல்உயிர் சமம்பெறாதுகேடடையும்.

### குறள்

சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை.

(ஷை-6ம் அதி—வாழ்க்கைத் துணைநலம்.7.)

என்னும் தேவர் திருவாக்கிலும் “நிறை” என்பது முன்னிலை விவகாரங்களில் நிறை முறை தவறாது ஒழுகுதலையே உணர்த்தி நின்றது.

(இ-ள்,) மதில் முதலிய முன்னிலைகளால் அரண் செய்யும் காவல்கள் என்ன பயனைச் செய்யும்? பெண்கள் தங்கள் மதி வைராக்கியத்தால் தங்களைக் காத்துக்கொள்ளும் காவலே தலையாயது என்பதாம்.

நிறை இல்வழி எவ்வகைக் காவலும் பயனற்றதாகும் என்பது கருத்து.

நிறையுடையோர் பிறர்மேற் கொண்ட முயற்சிகளை அவர் முகம் கண் என்னும் அவயவங்களால் ஆராய்ந்தறிய வல்லராவர். அஃதாவது முன்னிலைகளைப் பகுத்தறியும் ஆற்றல் உடையராவர். வாய்மையான சத்துவமுடையார் அவரே யாதலால் உலகம் அவர் வசப்படும். ஆதலால் பேரறிவுடையாராகிய நிறையுடையார் தமது முயற்சிகளைச் செய்து முடிக்கும் வரை அவற்றிற்குரிய உபாயங்களைப் புறத்தே தோன்றாமல் வைத்துப் பிறர் ஐயுறவும் இடந்தாராது தம்முடைய முயற்சிகளைத் தம் முக முதலியவற்றாலும் வெளிப்படுத்த மாட்டார். பின்வரும் ஆன்றோர் செய்யுட் கருத்தும் இதுவேயாகும்.

## நாலடியார்

ஆற்றுந் துணையு மறிவினை யுள்ளடக்கி
ஊக்கமுரை யாருணர்வுடையார்—ஊக்கம்
உறுப்பினாலாராயு மொண்மையுடையார்
குறிப்பின் கீழ்ப் பட்ட துலகு.

[ஷை—தாளாண்மை)

## குறள்

கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை
[யிடைக்கொட்கி
னெற்றா விழுமந் தரும்.

(ஷை—வினைத் திட்பம். 3.)

என்றார் தேவரும்.

(இ-ள்.) ஒருவன் செய்யும் முயற்சியை அதன் பேற்றினால் புலப்படச் செய்வதே ஆண்தன்மையாகும்; அங்ஙனமாகாது முதலிலும் இடையிலும் பிறர்க்குப் புலப்படும்படி செய்வானாயின், அம் முயற்சி அவனுக்கு நீங்காத துன்பத்தைத் தரும் என்பதாம்.

மெய்யடியார் ஒழுக்கங்களின் உண்மைகளைப் பாமர மாக்கள் அறியமாட்டார்கள். அவர் ஒழுக்கங்களுக்குக் கேடு சூழ்ந்து அவரை அவச்சலனமடைவிப்பார்கள். ஆதலால் அம் மெய்யடியார் தமது அரிய பெரிய சிவப்பணிகட்கு இடையூறு நேராதவாறு முன்னிலைகளோடு விவகரிப்பதில் நிறை முறை தழுவி ஒழுகுவர். இது பற்றியே "நிறை எனப்படுவது மறை பிறரறியாமை" (தொல்—பொருளியல்—பொருள்–15.) எனக் கூறினர் தொல்காப்பியரும் என அறிதற்பாற்று.

நிறையுடையவரே மதி வைராக்கியமாகிய வினைத்திட்பமும் உடையவராவர்.

## குறள்

வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்
[திட்ப
மற்றைய வெல்லாம் பிற.

(ஷை—வினைதிட்பம்—1.)

(இ-ள்.) பணிசெய்து கிடத்தலில் வன்மை என்பது ஒருவனது மதி வைராக்கியமே யாகும். அம்மதி வைராக்கியத்தோடு கூடாதன வெல்லாம் வன்மையோடு கூடிய சிறந்த பணிகள் என்று சொல்லப்படமாட்டா என்பது.

மாயாகாரியமாகிய இடம் பொருள் ஏவல்கள் திண்ணியவாயினவிடத்தும், மதி வைராக்கியம் இல்லாத இடத்துப் பணி இடையூறடையும் என்பது கருத்து.

ஆதலால் மதி வைராக்கியத்தையே வச்சிர கவசமாகப் பூண்டு நிறையோடு ஒழுகாதவழி உளவாகும் ஏதப்பாடுகள் பலவாகும் என்பது வெள்ளிடை. முன்னிலைகளை நிறைகண்டு பஞ்சீகரணிக்காத வழி முத்தியடையமுடியாது என்பதன் உண்மையும் இதுவே. அறுபான்மும்மை நாயன்மார் முதலிய மெய்யடியாரெல்லாம் குருநெறி கடைப்பிடித்துத் தம் தலை துணிக்கப்படும் வினை நேர்ந்தவிடத்தும், மதி வைராக்கியத்தோடு அஞ்சாது நின்று பணி புரிந்தமையாலன்றோ எம்பெருமான் அவர் மாட்டு இரங்கி இடபாரூடராய்க் காட்சி கொடுத்தனன். ஆதலால் மதி வைராக்கியமும் சகிப்புமே நிறையை அடையச் செய்யும் முக்கிய கருவியாகும் என அறிதற்பாற்று.

"அறிவுமடம்படுதலும் அறிவு நன்குடை
[மையும்"

(சிறுபாணாற்றுப்படை—216.)

என்னும் சங்கச் சான்றோர் வாக்கும் முன்னிலைகளை நிறையோடு தழுவுதலையே உணர்த்தி நின்றது. பாமரராகிய முன்னிலையோரின் தன்மைகளைப் பகுத்தறியாது அரிதிற் கற்ற அரும் பொருள்களை அன்னார் செவிமாட்டினால் அதனால் ஏற்படும் கையறவேக மிகப் பெரிதாம்.

இவ் வுண்மையையே

## குறள்

ஒளியார்முன் னொள்ளிய ராதல் வெளியார்
[முன்
வான்சுதை வண்ணங் கொளல்.

(ஷை—அவையறிதல், 4.)

என்பதனால் விளங்க வைத்தனர் தேவர்.

(இ-ள்.) தாம் கூறுவனவற்றை உணரும் மதிப்பொலிவுடையார் மாட்டு மேலான பொருளுரைகளைக் கூறித் தாமும் அறிவுடையராகுக;

உணரும் ஆற்றலும் காதலும் இல்லாத அறிவிலார் மாட்டு அவர் மதிக்குமாறு தாமும் அரும் பொருள்களைக் கூறாது அறிவிலாராய் நடிக்க வேண்டும் என்பதாம்.

## கைவல்லிய நவநீதம்

காமமாதிகள் வந்தாலுங் கணத்திற்போ
[மனத்திற் பற்றார்
தாமரையிலைத்தண்ணீர்போற் சகத்தொடுங்
[கூடிவாழ்வார்
பாமரரெனக் காண்பிப்பார் பண்டிதத்
[திறமை காட்டார்
ஊமருமாவ ருள்ளத்துவகையாஞ்
[சீவன் முத்தர்.

எனவும்,

## குமரகுருபரர்

கற்றன கல்லார் செவிமாட்டிக்கையறூஉம்
குற்றம் தமதே பிறிதன்று-முற்றுணர்ந்தும்
தாமவர் தன்மை உணராதார் தம்முணரா
எதிலரை நோவ தெவன்.

எனவும் ஆன்றோர் கூறியனவும் ஈண்டு நோக்கற்பாலன.

மேலே கூறியவாறு நிறையோடு ஒழுகாதவழி அஃதாவது முன்னிலைகளை நிறைகண்டு பஞ்சீகரணிக்காதவிடத்து ஒருவன் வாழ்க்கை இனிதின் இயலாது. அவன் எத்துணைப்பெரிய தவமுடையவனே யாயினும் தென்புலக் கோமகனுக்கு நல்விருந்தாதல் திண்ணம். நிறை கொண்டால் மூலன்; நிறை விண்டால் காலன். நிறையே

நடுவு நிலைமையுமாம். நிறை ஒத்தால் —பொருந்தினல் காலன் மூலனுகின்றன். வாய்மையான நடுவு நிலைமையுடையவர் நிறை தவறமாட்டார். பின்வரும் பிரபல சுருதிகள் இவ் வுண்மைகளை நன்கு புலப்படுத்தும்.

## அப்பர் தேவாரம்

நடுவிலாக்காலன்வந்துநணுகும்போதறிய [வொண்ணு
அடுவனவஞ்சுபூதமவைதனக்காற்ற [லாகேன்
படுவனபலவுங்குற்றம்பாங்கிலாமனிதர் [வாழ்க்கை
கெடுவெதிப்பிறவி சீ சீ கிளரொளிச் சடை [யினீரே

(ஷை—தனித்—திருநேரிசை. 10.)

மறைகொண்ட மனத்தானை மனத்துனே
நிறை கோண்ட நெஞ்சினுள்ளுற [வைம்மினே
கறைகண்டனுறையுங் கடம்பந்துறை
சிறைகொண்ட வினை தீரத் தொழுமினே.

(ஷை-திருக்கடம்பந்துறை — திருக்குறுந் தொகை. 5.)

வேதமோதிவந்தில்புகுந்தாமவர்
காதில்வெண்குழைவைத்த கபாலியார்
நீதியொன்றறியார் நிறைகொண்டனர்
பாதி வெண்பிறைப் பாசூரடிகளே.

(ஷை—திருப்பாசூர்—ஷை—8.)

பிறையுஞ்சூடி நற்பெண்ணொடாணுகிய
நிறையு நெஞ்சமு நீர்மையும் கோண்ட [வன்
அறையும் பூம்பொழிலாவடுதண்டுறை
இறைவனென்னையுடையவனென்னுமே.

(ஷை—திருவாவடுதுறை ஷை 8.)

நிறையோடு பொருந்தி நிற்றலால் ஆம் பயன் என்னை? உடல் உயிர் சமம் பெறுதலாகிய இருவினை ஒப்பு மல பரிபாகம் உண்டாகும் என்பது. இதனால் சீவத்துவம் மாறும்—பசு கரணங்கள் பதிகரணங்களாக மாற்றமடையும். சீவத்துவம் பொருந்திய ஐம்புலனும் மாற்றமடையும்—அமலமடையும் என்பது பின்வரும் பிரமாணத்தால் நன்கு புலப்படும்.

## அப்பர் தேவாரம்

நீற்றினனிமிர்புன்சடையான்விடை
ஏற்றினனெமையாளுடையான் புலன்
மாற்றினன் மயிலாடுதுறையென்று
போற்றுவார்க்குமுண்டோபுவி [வாழ்க்கையே.

(ஷை திருமயிலாடுதுறை—திருக்குறுந் தொகை, 7.)

நிறையுடைமை எதனல் ஆக்கமுறும்? மதி வைராக்கியத்தாலும் பொறையுடைமையாலும் ஆக்கமுறும் என்பது. தன்மாட்டும் பிறர்மாட்டும் உளவாகும் மாயா காரியமாகிய நன்மை தீமைகளில் விருப்பும் வெறுப்பும் இன்றி அவற்றைச் சகித்து மனம் சலனமடையாதிருப்பதே பொறையுடைமையாகும். இவற்றைச் சகிக்க முடியாது அவச்சலனமடைவதே பொறாமை எனப்படும். மாயாகாரியமாகிய நன்மை தீமைகள் ஊழான் உளவாவனவேயன்றி யாம் கருதியவாறு ஆவனவல்ல எனத் துணிந்து நெஞ்சத்துக் கோடாது நிற்றலாகிய நடுவு நிலைமையே பொறையுடைமையும் அதன் பயனுகிய நிறையுடைமையுமாம். இப்பெற்றி கைவரப் பெறுதல் அரிதினும் அரிதாகும். பின்வரும் தேவர் திருவாக்குக்கள் இவ் வுண்மைகளை நன்கு புலப்படுத்தும்.

## நன் கொடை.

"வித்தகம்" எனும் எமது பத்திரிகைக்கு மனமுவந்து நன்கொடையாக ரூபா மூன்று அளித்த சிலோன் (Ceylon) கொழும்பு (Colombo) மருந்து இலாக்கா (Medical Department) திருவாளர் டாக்டர். ஏ. டி குரியன் (Dr. A. T. KURIEN) அவர்களுக்கு எமது மனமார்ந்த வணக்கம் என்றும் உரிமையாகற்பாலது.

[ப—ர்]

## குறள்.

நிறையுடைமை நீங்காமை வேண்டிற் [பொறையுடைமை
போற்றி யொழுகப் படும்.

(ஷை பொறையுடைமை 4.)

(இ-ள்.) மனம் சலனமற்று அஃதாவது கீழ் நிறை ஐகாரப் பொலிவாகிய அவச்சலனமற்றுச் சாந்திபெற்றிருத்தலை ஒருவன் விரும்புவானுயின், அவன் சகிப்பு என்னும் குணம் தன்னை விட்டு நீங்காதவாறு அதனைக் காத்து ஒழுகவேண்டும் என்பதாம்.

கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி.

(ஷை—நடுவு நிலைமை. 5.)

(இ-ள்) இருவினைப் பயனுகிய கேடும் ஆக்கமும் ஒருவனுக்குக் கருவில் அமையப் பெற்றன; ஆதலால் இவ் வுண்மையை அறியாது, அவை இப்பொழுதே புதியனவாகக் கருதி அவை காரணமாக மனம் நிறை பிறழ்ந்து நில்லாது நடுவு நிற்றலைப் பொருந்துதல் சால்பு என்னும் நிறையுடையோர்க்கு அழகாம் என்பது.

உடலுயிர் இருவினை சொரூபமாகலான் அவ்வினைகளான் உளவாகும் கேடும் பெருக்கமும் கருவுட்பட்டன என்பாராய் "கேடும் பெருக்கமும் இல் அல்ல" என்றார். வினைவயத்தான் உளவாகும் நன்மை தீமைகளில் நிறையில்லாத அவாவினல் விருப்பும் வெறுப்பும் உற்று அவச்சலனமடைந்து நடுவு நிலைமை குன்றுவது அஃதாவது நிறை பிறழ்வது ஆறறிவு பூரணம் பெற்ற மானிடர்க்கு அழகன்று என்பது கருத்து.

ஆறறிவு பூரணம் பெறாத உலகமாக்கள் நிறை முறை அறியார். எவரெவர் எவ்வெக்காலத்தில் எவ்வெவ் வினையை விளைத்தனரோ அவ்வவ் வினை விளைவே முன்னிலையன்றி வேறு முன்னிலை இல்லை என உணர முடியாமையே நிறை பிறழ்ச்சியை உள

தாக்கும் பொருமை என்னும் அழுக் காற்றுக்குக் காரணமாகும். இவ்வா ருன அறியாமையால் முன்னிலேகளில் குறை காண்பதும் வெறுப்படைவதும் விருப்படைவதும் அம் முன்னிலே களேத் தற்சுதந்திரத்தால் அடிமைப் படுத்த முயன்று அவற்றுக்கே அடி மையாவதும் அதனல் நிறை பெருது மனம் அவச்சலனமடைந்து சாத லடைவதுமே அகில மாக்கள் மாண்பு. உலகில் உணவுகளே நிறை கண்டு அருந்துபவரைக் காண்பதுமே அரி தாகும். சரீரமும் மனமும் தூய்மை அடைவதற்கு உணவு முக்கியம் என் பதை அறிவார் மிக அரியர். நிறை கொண்டு அருந்திஞல் அருந்தியது பொருந்தும். அதனல் அசுத்த நிறை யாகிய மாயை அணு அணுவாக அனந்தலடையும். அமல நிறை ஆக்க முறும். நிறை சுத்தமும் அசுத்தமும் என இருவகைப்படும். கீழ் நிறைப் பொலிவாகிய அசுத்தம் அமலமாக மாறுதல் அடையவேண்டும். அமல நிறையே சத்துவம்—சிவம். உண்மைச் சத்துவமுடையார் தூலம் அமல மடையும்—சூக்குமமாகும்— பிரணவ தநுவாகும். அமல நிறை ஆக்கமுறப் பெற்ற மெய்யடியார் தூலம் பிணமாகி விழ இறந்து பிறவி வலேப்படமாட் டார். உலகு கண்டு போற்றும்படி தூலத்தோடு மறைந்து உண்மைச் சைவமுத்தியடைவர். ஆதலால் அமல நிறை ஆக்கமுறுதற்கு முன்னிலேகளே நிறைகண்டு பஞ்சீகரணித்தல் இன்றி யமையாததென்பது நிச்சயமாகும்.

இது காறும் கூறியவைகளால், நிறை இன்னது என்பதும், காரணமாகிய நிறையை அடைவதற்கு காரியமாகிய லௌகிக விவகாரங்களில் நிறை முறை தவருதிருத்தல் அவசியம் என்பதும், நிறையை அடையப் பெற்ருேர் உண்மை முத்தி அடைவர் என்பதும் பிறவும் ஒருவாறு உணரப்படும்.

சுபம்.

## வித்தக மதிப்புரை.

---

யாழ்ப்பாணம் தென் கோவை தமிழ்ப் பண்டிதர் ச. கந்தையப் பிள்ளே அவர்களே ஆசிரியராகக் கொண்ட இவ்வாரப் பத்திரிகை நமது பார்வைக்குக் கிடைக்கப் பெற்ருேம். இது ஒவ்வொரு வியாழன் தோறும் வெளிவருகிறது. இவ்விதழில் பிரும் மசரியத்தின் பெருமையை வேதா கமங்களேக் கொண்டும் திருவாசகம், திருவாய்மொழி, திருமந்திரம் முதலிய நூல்களேக் கொண்டும் இதனசிரியர் நன்று விளக்கிக் காட்டியிருக்கிருர். இதனல் மதவிரோத மில்லாத வழி யில் நடத்தப்படுவதாக நன்கு புலனுவ தால் மதபப்பற்றுள்ள தமிழபிமானிகள் ஒவ்வொருவருக்கும்பேருதவியளிக்கக் கூடும். செந்தமிழ்சொல் நிரம்பிய இப் பத்திரிகை தமிழபிமானிகளுக்கு அதிக சந்தோஷத்தை தரக் கூடிய தாக இருக்கிறது.

குறிப்பு :—எமது "வித்தக"த்தில் வெளிவந்த கட்டுரைகளேச் செவ்வனம் ஆராய்ந்து, அவை மதவிரோத மில் லாத வழியில் இயலுதல் நன்கு புல னுகின்றமையால் தமிழபிமானிகட்குப் பேருதவி புரிந்து மகிழ் வூட்டுகின்றன எனவும், ஷெ இல. 26. வெளிவந்த "பிரமசரியம்" என்னும் விஷயம் பிர பல சுருதிகளாகிய சம்ஸ்கிருத வேத தமிழ் வேதப் பிரமாணங் கொண்டு நன்கு விளக்கி எழுதப்பட்டது என வும் அபிமானப்பேயால் ஆவேசிக்கப் பட்டு ஒருபாற் கோடாது தங்கள் தூய உள்ளத்து எழுந்த ஆராமை மிகுதியால் உண்மையை உவகையோடு உரைத்து மேலே காட்டிய மதிப் புரையை அளித்த வைதிகப் பிரமாண குலதிலகர்களும் சம்ஸ்கிருத மஹா பண்டிதர்களும் வேதசிவாகமாதி பல சாஸ்திர விற்பன்னர்களுமாகிய "ஆர்யதர்மம்" என்னும் அரிய பெரிய திராவிட வாரசஞ்சிகையின் ஆசிரியர்களுக்கு எமது மனமார்ந்த வணக்கம் என்றும் உரிமையாகற்பா லதே என்பதனே மிக்க பணிவுடன் தெரிவித்துக்கொள்ளுகின்ருேம். இத்தகைய மதிப்புரையை அளித்த வாற்ருல்,

> கற்றறிந்தார்கல்விவிளங்குங்கசடறச்
> சொற்றெரிதல் வல்லாரகத்து.
>
> (குறள் 72-அதி. அவையறிதல் சே. 7)

என்னும் பொய்யாமொழிக்கு இலக்கி யம் புதுக்கிய இவ் ஆசிரியர்களும், வேதசிவாகமாதி சகல சாஸ்திர விற் பந்நர் மலிந்த கும்பகோணத்து ஸ்ரீலஸ்ரீ வி. ஜகதீச்வர சாஸ்திரிகள், அக்னிஹோத்ரம் கோபாலதேசிகா சாரியார் இவர்களால் நடாத்தப்படும் இவ்வாரவெளியீடும் நீடு வாழும்படி எல்லாம்வல்ல சித்தனுகிய எம் பெருமான் இணையடி மலர்களே இறைஞ்சுகின்ருேம்.

[ப—ர்.]

## சுத்தசாதகம்

---

துறவின் றன்மையையும், தேகம் சித்திபெற்ருல் முத்தியுண்டாமென் பதன் றன்மையையும், சாதன சதுஷ் டயத்தின் றன்மையையும், மகாவாக் கியத்தின் பொருளேயும், சொரூபானு பவத்தின் றன்மையையும், வேதாக மங்கள் கருத்துவகையால் வேறுபா டின்றியிருக்கும் வகையையும், தத்துவ ஞானத்திற்குப் பரம்பரா சாதனமா யுள்ளவைகளின் றன்மையையும், உள்ளங்கை நெல்லிக்கனிபோல் செப் பமாக விளக்கியுள்ள இந்நூல் துக்க நிவர்த்தியிலும் பரமாநந்தப் பிராப்தி யினு மிச்சையுள்ள ஒவ்வொருவருக் கும் அத்தியாவசியமாய் அறிய வேண் டற்பாலதாமென்பது குன்றின் மேலிட்ட விளக்காம்.

**வேண்டுவோர் அணு 0—2—9 தபால் முத்திரை அனுப்பி பெற்றுக் கொள்ளலாம்.**

**நந்தி வெளியீட்டு மன்றம். புதுவை, (F. India.)**

# உடலுயிர்ச் சம்பந்தம்

( 24-ம் வாரத்தொடர்ச்சி )

இப்படியை அடைந்த காலத்திற்றான் மணிவாசகப் பெருமான் திருக்கழுக்குன்றப் பதிகத்தை அருளிச் செய்தனர். அப்பதிகத்தில் திருப்பாட்டிறுதிதோறும் "காட்டினாய்கழுக்குன்றிலே" என்று அருளிச்செய்யப்பட்டது. எதனைக்காட்டினார் சிவபெருமான்? எதனைக் கண்டார் மணிவாசகர்? இதனை ஆழ்ந்து நோக்கினார் உண்டோ? ஒருவன் இப்பூவுலகத்தை ஆளும் ஏகச் சக்கிராதிபதியாய் இருப்பினும் இந்திரபோகம் தனக்கு இல்லையே என்னும் குறை அவனுக்கு உண்டு. இப்படியை அடைந்த மெய்யடியார் நிலையோ அவ்வாறன்று. எதனை நினைப்பினும் அது இயங்கும்; முன் வந்து நிற்கும். சகல போகங்களையும் நினைத்தவண்ணம் ஆக்கும் ஆற்றலுடையவர் இப்படியை மிதித்தவரேயாதலால், யாவற்றையும் நிறைகண்டு கொண்டு அநுப்வித்த பின் உபரதி பெறுதற்குரியார் — உண்மைத் துறவிற்குரியார் இவரே என அறிதல் வேண்டும். எவ்வகையான சுகத்தையும் பூரணமாய்க்காணும் வல்லபம் இல்லாதவன் அவற்றை வெறுத்தேன் துறந்தேன் என்றால் அக்கூற்று வாய்மையாகுமா? யாவற்றையும் கண்டன்றோ அநுபவித்தன்றோ தன்னிடத்தில் இருக்கப் பெற்றன்றோ ஒருவன் அவற்றைத் துறக்க வேண்டும்? ஆதலாற்றான் இப்படியை மிதித்து —இப்படியில் ஏறி நின்று யாவற்றையும் கண்டு—பூரண அமலம் பெறுதற்குரிய கருவிகளைக் கண்டு அநுபவித்து உய்தியடையவேண்டும் என்பது.

வீழ்நாள் படாமை நன்றாற்றி [னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்.

(இ-ள்) வீழ் நாள் படாமை ஒருவன் நன்று ஆற்றின்—முதற்படியை மிதித்தமையோடு அமையாது மேல்படியேற்றம் பெறுதற்கேற்ற ஒழுக்கத்தினின்றும் தவறும் நாள் உளவாகாமல் ஒருவன் சற்குருநாதன் விதிப்படி அறத்தைச் செய்வானாயின் (அஃதாவது அறத்தாறு ஒழுகுவானாயின்) அஃது வாழ் நாள் வழியடைக்கும் கல் — அவ்வொழுக்கம் அவன் உலகில் மேல் வாழும் நாள் வருகின்ற வழியை அடைக்கும் கல்லாகும் என்பது.

அவன் மீண்டு வாரா உண்மை நிலையை அடைதல் திண்ணம் என்பதாம்.

பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் [வாழ்க்கை
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்.

(இ-ள்) வாழ்க்கை பழி அஞ்சிப் பாத்து ஊண் உடைத்தாயின் ஒருவன் வாழ்க்கையானது (நிறையும் இனமும் அறியாது இச்சைப்பட்டதையெல்லாம் உண்ணுதலால் உளவாகும்) பழிக்கு அஞ்சி முன்னிலை உணவுப் பொருள்களில் தன் சரீரத்துக்கு இனமானவை இன்னவை எனப்பகுத்து அறிந்து உண்ணுதலை உடையதாயின், வழி எஞ்சல் எஞ்ஞான்றும் இல்—அவன் படியேற்ற நெறி பூரணமாக நிற்றலேயன்றிக் குறைவுபடுதல் ஒருபோதும் இல்லை என்பது.

முன்னிலைப்பொருள்களை நிறை கண்டு பஞ்சிகாணித்து அருந்துதலால் அருந்தியது பொருந்தும். பொருந்துதலால் பழி பாவங்களை விளைக்கும் காமம் கோபம் முதலிய குணங்கட்குக் காரணமாய்ச் சாதலைத் தருவதாய்ச் சரீரத்துள்ள அசுத்த நிறை யென்னும் பாசம் அணு அணுவாக அனந்தலடையும். இதனால் முத்தி வழியாகிய படியேற்றம இனிதின் இயன்று வீடுபேறு உளதாம் என்பது.

( தொடரும் )



Sandhanam Printing Works, Pondicherry. Le Gérant, R.Nagarattinam